15th December 1961]

*Textile Mills*

* 2358 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கதர் அபிவிருத்தித் திட்டம் அமுலில் உள்ள இடங்களில் பஞ்சாலைகளுக்கு லைசென்ஸ் தர முடியாதென்பது உண்மையா ?

(இ) அப்படியாயின் அதன் நோக்கமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) & (இ) A report has been called for from the State Khadi and Village Industries Board and it is awaited.

SRI S. M. ANNAMALAI : அப்படி கதர் அமைத்துள்ள இடங்களில் ஏன் பஞ்சாலை அமைக்கக்கூடாது? இது மத்திய சர்க்கார் கொள்கையா, மாநில சர்க்கார் கொள்கையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைப்பற்றி சரியான தகவல் என்னிடம் இல்லை. ரிபோர்ட் கேட்டிருக்கிறோம். அது வந்தால்தான் விஷயம் தெரியும்.

*House-sites for Harijans*

* 2359 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the actual amount of expenditure incurred for acquiring house-sites for Harijans in the State during the year 1960–61;

(*b*) the total number of house-sites acutally distributed during the year 1960-61;

(*c*) the average cost per house-site; and

(*d*) the average number of house-sites per acre of land acquired?

THE HON. SRI P. KAKKAN : (*a*) to to (*d*) A statement is placed on the table of the House.

SRI M. KALYANASUNDARAM : இந்த மனைக்கட்டுகள் வழங்குவதில் துரிதமான நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்பதைத்தான் கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தவிதமாக துரிதமாக நடவடிக்கை எடுக்காததற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI P. KAKKAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அவர்கள் கேட்ட கேள்விக்கு இதுபரியந்தம் ரூ. 19,81,698-11-க்கு சர்க்கார் ஹவுஸ் சைட்டுகள் வாங்கியிருக்கிறோம். 16,224 ஹவுஸ் சைட்டுகள் பிரித்துக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. இப்போது அதிக அக்கரை எடுத்துக்கொண்டு ஹவுஸ் சைட்டுகள் கொடுக்கப்படுகின்றன. இந்த மனைக்கட்டுகளை அக்வை

a Printed as Appendix I on page 1092 infra.

செய்யும்போது நிலச்சொந்தக்காரர்கள் ஹைகோர்ட்டில் ரிட் போட்டுவிடுவதினுல் காலதாமதம் ஏற்படுகிறது. எங்கெங்கெல்லாம் ஹவுஸ் சைட்டுகள் பிரித்துக்கொடுக்கமுடியுமோ அந்தந்த இடத்தில் எல்லாம் துரிதமாக கொடுப்பதற்கு கலெக்டருக்கு இன்ஸ்ட்ரக்ஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**SRI V. K. KOTHANDARAMAN:** லட்சக்கணக்கான மக்களுக்கு வீட்டு மனைகள் கிடைக்காத நேரத்தில், ரூ. 19 லட்சத்திற்கு மனைக்கட்டுகள் வாங்கியிருக்கிறோம் என்று சொன்னுல் பிரயோஜனம் இல்லை. யார் யாருக்கு வீடுகளை கொடுக்க முடியுமோ அவர்களுக்கு துரிதமாக கொடுப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

**THE HON. SRI P. KAKKAN:** வீட்டு மனைகள் அதிகமாக கொடுக்க வேண்டுமென்றுதான் ரூ. 19,81,798-11 மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்தில் ஒதுக்கியிருக்கிறோம்.

**SRI M. KALYANASUNDARAM:** கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கும் அறிக்கையில், கோயம்புத்தூர் ஜில்லாவில் வாங்கி இருக்கக்கூடிய ஒரு சைட்டுக்கு சராசரி விலை ரூ. 1,232 ஆகிறது. அதுவும், ஒரு ஏக்கருக்கு 13 மனைக்கட்டுகள்தான் பிரிக்கப்படுகின்றன. இது மிகவும் அதிகமான விலை என்று சர்க்கார் கருதவில்லையா ? இப்படி அதிகவிலை கொடுத்து வாங்கியதற்குக் காரணம் என்ன ?

**THE HON. SRI P. KAKKAN:** கோயம்புத்தூர் ஜில்லாதான் தொழில் மிகுந்த இடமாக இருக்கிறது. இது சாமான்யமாக அக்வையர் செய்ய முடியவில்லை. சில இடங்கள் நகரத்தை ஒட்டியிருக்கின்றன. சில இடங்கள் பாக்டரியை ஒட்டியிருக்கின்றன, தோட்டக்கால் நிலங்களாக இருக்கின்றன. அதனுல் அதிக விலை கொடுத்து வாங்கவேண்டியிருக்கிறது.

**SRI P. G. MANICKAM:** ஹரிஜனங்களுக்கு அதிக மனைக்கட்டுகளை வழங்குவதற்கு தீவிர சிரத்தை எடுத்துக்கொள்வதற்கு மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்தில் அதிக பணம் ஒதுக்கும்படியாக மத்திய சர்க்காருக்கு நமது சர்க்கார் ஏதாவது அறிக்கை சமர்ப்பித்திருக்கிறுர்களா ? அப்படியிருந்தால் அதன் விவரம் என்ன ?

**THE HON. SRI P. KAKKAN:** ஹவுஸ் சைட்டுகளுக்கு நிறைய பணம் ஒதுக்கவேண்டுமென்று மத்திய சர்க்காரிடமும், பிளானிங் கமிஷனிடமும் பேசி 60 லட்ச ரூபாய் மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு எவ்வளவு தூரம் துரிதமாக நடவடிக்கை எடுக்க முடியுமோ அவ்வளவு தூரம் துரித நடவடிக்கை எடுக்கப்படும்.

**SRI K. R. NALLASIVAM:** இப்பொழுது குறைந்த நிலம் வைத்திருப்பவர்களிடமிருந்து ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகள் வாங்குவதிலே இந்த நிலச் சொந்தக்காரர்கள் தகராறு செய்

15th December 1961]

கிறார்கள். இதனால் 5 ஏக்கருக்குள் நிலம் வைத்திருப்பவர்களிட மிருந்து நிலங்களை அக்வையர் செய்யக்கூடாதென்று சர்க்கார் உத்தரவு போடுவார்களா ?

THE HON. SRI P. KAKKAN : ஐந்து ஏக்கருக்குள் இரண்டரை ஏக்கர் வரையிலுள்ள நிலங்களை அக்வையர் செய்யக்கூடாதென்று உத்தரவு போடப்பட்டிருக்கிறது.

*Deaths due to rain*

* 2360 Q.—SRI V. K. KOTHANDARAMAN : } கனம் ரெவின்யூ
SRI A. A. RASHEED :
அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

நமது ராஜ்யத்தில் சமீபத்தில் மழையின் காரணமாக உயிரிழந்தவர்கள் எத்தனை பேர்? ஜில்லாவாரியாக ?

THE HON. SRI M. A. MANICKAVELU :

*Number of human beings who lost their lives on account of recent rains*

| | |
|---|---|
| Tirunelveli .. .. .. .. | 4 |
| Coimbatore .. .. .. .. | 6 |
| The Nilgiris .. .. .. .. | 17 |
| Kanyakumari .. .. .. .. | 1 |

SRI V. K. KOTHANDARAMAN : அவர்களுக்கு ஏதாவது நஷ்டஈடு கொடுக்கப்பட்டதா அல்லது கொடுப்பதற்கான ஏற்பாடு ஏதாவது உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது மழையினாலே வீடு சரிந்து விழ்ந்ததுபற்றிய கேள்வி. இப்போது வீடுபற்றிக் கொண்டால் நஷ்டஈடு எவ்வளவு கொடுப்பது என்ற தகவலும் என்னிடம் இல்லை.

*Sea-erosion*

* 2361 Q.—SRI V. K. KOTHANDARAMAN (on behalf of SRI N. K. PALANISAMI) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the extent of damage caused by sea-erosion in the Coastal Districts of the State last year;

(*b*) whether any permanent measures are contemplated by Government to check this erosion; and

(*c*) if so, cost of the same and the present stage at which the matter stands?

THE HON. SRI P. KAKKAN : (*a*), (*b*) & (*c*) A statement [a] is placed on the table of the House.

---

a Printed as Appendix II on page 1092-1093 infra.